REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 35630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர்..அண்ணாதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

## அநியாய புத்திசாலிகள்!

"'எவரெஸ்ட்' சிகரத்தை எட்டிப் பிடித்தவர் ரயில்வே மந்திரியான லால்பகதூர் சாஸ்திரி!"

"டில்லி செங்கோட்டையைக் கட்டியவர் நேத்தாஜி சுபாஷ் சந்திர போஸ்!"

"இந்தியாவின் முதல் கவர்னர்-ஜெனரல் காந்தியார்!"

"பண்டித் நேரு மத்திய பாரத் மாநில முதன் மந்திரி!"

இப்படிக் கூறும் 'அநியாய புத்திசாலிகள்' யார் என்று கேட்கிறீர்களா?

மத்திய பாரத் மாநிலத்தில் ஆசிரியர் வேலைக்காக மனு போட்டிருந்தவர்கள் நேரில் பரீட்சிக்கப்பட்டபோது கூறிய பதில்கள் தான் மேலிருப்பவை!

மலர் 2] சென்னை: கார்த்திகை 8உ செவ்வாய் (23—11—54) ★ ★ வெளியூர்: கார்த்திகை 9உ புதன் (24—11—54) [இதழ் 139

# பாகிஸ்தானில் சுயாட்சி மறைகிறது!

## இரண்டு மாநிலங்கள்; வலிமை மிக்க மத்திய சர்க்கார்

## பரந்த மனப்பான்மையில் வளரும் 'சர்வாதிகாரம்!'

"கடந்த ஏழாண்டு காலமாக பாகிஸ்தானில் காணப்பட்ட மாகாண எல்லைக் கோடுகள், ஒற்றுமையை ஏற்படுத்த உதவவில்லை; மாறாக, பிளவு மனப்பான்மையை உண்டுபண்ணி, பாகிஸ்தானின் வலிமையைக் குறைக்கவே பயன்பட்டிருக்கிறது; பொருளாதார அபிவிருத்தியை ஏற்படுத்துவதைவிட பொருளாதார சீர்கேட்டையே ஏற்படுத்தியது; ஆகவே, அவைகள் அவசியம் இல்லை,"

—என்று, பாகிஸ்தான் பிரதமர் முகமது அலி கராச்சி வானொலியில் பேசுகையில் குறிப்பிட்டு, தொடர்ந்து கூறியதாவது:—

"மாகாணங்கள் போன்ற அரசியல் பிளவுகள் ஆங்கிலேயரின் கரத்தை வலுப்படுத்தவும், நம்மைப் பலவீனப்படுத்தவும் அவசியமாக இருந்தன; இன்று பாகிஸ்தானின் வசதிகள் அனைத்தையும் எல்லா பாகிஸ்தானியர்களும் சமமாகப் பங்கிட்டுக்கொள்ளலாம்."

"பொருளாதாரத் துறையில் பார்த்தால் மேற்குப் பாகிஸ்தான் முழுமையும் ஒரே மாகாணமாக இருக்க வேண்டியது அவசியமாகிறது; ஏனெனில், மேற்குப் பாகிஸ்தான் முழுவதிலும் விவசாயப் பொருளாதார சூழ்நிலையே நிலவுகிறது," என்றார்.

பாகிஸ்தான் பிரதமர், வானொலி மூலம் பேசுகையில், மக்களுக்கு அறிவித்ததாவது:—

"மேற்கு பாகிஸ்தானிலுள்ள எல்லா மாநிலங்களையும், ஒரே அங்கமாக இணைக்கவும், கிழக்கு வங்கத்தின் பெயரை கிழக்கு பாகிஸ்தான் என்று மாற்றி அமைக்கவும், பாகிஸ்தான் அரசாங்கம் தீர்மானித்துள்ளது.

"மேற்கு பாகிஸ்தான் மக்கள் தொகை 3 கோடியே 40 லட்சம் மட்டும்தான்; 4 கோடியே 40-லட்சம் மக்கள் தொகை கொண்ட கிழக்கு வங்கத்திற்கு ஒரே மாநில ஆட்சிதான் உண்டு; அப்படி இருக்கும்போது 3-கோடி 40 லட்சம் மக்கள் தொகை மட்டும் கொண்ட மேற்கு பாகிஸ்தானில், ஆறு அல்லது ஏழு மாநில அரசாங்கங்கள் இருப்பது நியாயமா? தேவையா?" என்று கேட்டார்.

மேலும், மேற்கு பாகிஸ்தான் ஒன்றாக இணைக்கப்படுவதினால், நாட்டின் ஐக்கியம் பலப்படும் எனவும், பாகிஸ்தானில் நிலவும் மாகாணப் பித்து ஒழியும் எனவும் பஞ்சாபிக்காரன், சிந்துக்காரன், பலுசிஸ்தானத்தவன், பட்டாணியன் என்று எண்ணும் நிலையிலிருந்து மக்கள் மாறி, 'பாகிஸ்தானியர்கள்,' என்று எண்ணும் நிலைக்கு வருவார்கள் என்றும், இணைப்பதினால் நிர்வாகப் பொருளாதாரம் நிரம்ப மிஞ்சுமென்றும் பாக். பிரதமர் தெரிவித்தார்.

"மேற்கு பாகிஸ்தான் ஒரு மாநிலமாகவும், கிழக்கு பாகிஸ்தான் ஒரு மாநிலமாகவும் தனித் தனியாக இயங்க வேண்டிய அவசியம் கூட பாகிஸ்தானின் விசித்திரமான பூகோள நிலைகளினால், உருவாகியதுதான்," என்றும் முகம்மது அலி தெரிவித்திருக்கிறார்.

மேற்கு பாகிஸ்தானில், இப்போது பஞ்சாப் சிந்து, பலுசிஸ்தானம், வடமேற்கு எல்லை மாகாணம் ஆகிய மாநிலங்களும், 10 சமஸ்தானங்களும் இருக்கின்றன.

இந்த மாநிலங்களை ஒரே மாநிலமாக, மேற்கு பாகிஸ்தானாக இணைவதற்கு எதிர்ப்பு இருப்பதையும் முகம்மதலி சுட்டிக்காட்டி, அந்த எதிர்ப்பு, சுயநலமிகளால் எழுப்பப் படுவது என்றும் கூறியிருக்கிறார்.

மேற்கு பாகிஸ்தான் இணைப்பிற்குப் பிறகுதான் அரசியல் திட்ட அமைப்பு வேலைகள் துவங்குமெனவும் அவர் கூறியிருக்கிறார்.

மேற்கு பாகிஸ்தானின் தலைநகரம் லாகூரிலும், கிழக்குப் பாகிஸ்தான் தலைநகர் டாக்காவிலும், இரண்டிற்கும் சேர்த்து மத்திய அரசாங்கம் கராச்சியிலும் இருக்குமென்று தெரிய வருகிறது.

### சிந்து இளைஞர்கள் எதிர்ப்பு!

கராச்சி, நவ. 22—

இன்று கராச்சியிலும், மற்றும் சிந்து மாகாணம் முழுமையும் மாணவர்கள் கல்லூரிக்குச் செல்லாமல் தங்கள் எதிர்ப்பைக் காட்டினர்.

பாட்ஜுகள் அணிந்துகொண்ட மாணவர்கள், நான்கு பேர்களாக அணிவகுத்து, நகரின் முக்கிய தெருக்களில் ஊர்வலமாகச் சென்றார்களாம்.

ஒரே ஆட்சியின் கீழ், மேற்கு பாகிஸ்தானைக் கொண்டுவர முயற்சிக்கும் போக்கை எதிர்த்து அவர்கள் கோஷமிட்டுச் சென்றார்களாம்.

கராச்சியில் 144 தடை உத்தரவு அமுலில் இருப்பதால், மாணவர்கள் அதை மீறாது, நான்கு பேர்களாகவே அணிவகுத்துச் சென்றார்கள்.

சிந்து மாகாண சர்க்கார் காரியாலயத்தில் ஊழியர்கள் அனைவரும், 'சிந்து நாள்' தினத்தை ஒட்டி, 'கருப்பு பாட்ஜுகள்' அணிந்து சென்றார்கள் என்று தெரிகிறது.

ஐந்தாண்டுத் திட்டத்தில், சமூக அபிவிருத்தித் திட்டங்களுக்காக ரூ. 400 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

## 'கொரியாவை விட்டு வெளியேறுக!'

### கம்யூனிஸ்டு உறுப்பினர்களை தென் கொரிய தளபதி மிரட்டுகிறார்!

கொரியப் போர் நிறுத்த மேற்பார்வைக் குழுவில் உள்ள கம்யூனிஸ்டு உறுப்பினர்கள் ஒரு வாரத்திற்குள்ளாக கொரியாவை விட்டு வெளியேற வேண்டும்; இல்லாவிடில், எங்கள் தற்காப்பிற்காக நாங்கள் உறுதியான நடவடிக்கை எடுப்போம்,"

என்று தென் கொரிய தளபதி ஜெனரல் வான்-யுங் கொக்கரித்துள்ளார்.

போலந்தும், செக்கோஸ்லோவாக்கியாவும் கொரியப் போர் நிறுத்தக் குழுவில் உள்ள கம்யூனிஸ்டு நாடுகள் ஆகும்.

தென் கொரிய இராணுவ விஷயங்களை இந்த உறுப்பினர்கள் உளவறிந்து எதிரிக்குத் தெரிவித்து வருவதாக ஜெனரல் வான்-யுங் குற்றச் சாட்டுகிறார்.

இதற்கிடையே கூட்டு இராணுவக் குழுவிடம் வடகொரியர் ஒரு நல்ல யோசனையைத் தெரிவித்திருக்கின்றனராம்.

கொரியாவைச் சமாதான முறையில் ஒன்றுபடுத்த முயற்சிப்பதற்காக வடகொரியாவுக்குத் தென் கொரியர் வந்தால் அவர்களது பாதுகாப்பிற்கு உத்திரவாதம் அளிப்பதாக வடகொரியர் தெரிவித்திருக்கின்றனர் என்று தெரிகிறது.

இந்தியாவில் தற்போது 45,000 அஞ்சல் நிலையங்கள் உள்ளன.

## விஷின்ஸ்கி காலமானார்

நியூயார்க், நவ. 22—

ரஷியாவின் சிறந்த ராஜதந்திரிகளில் ஒருவரும், ஐ.நா. சபையில் ரஷியாவின் தலைமைப் பிரதிநிதியுமான ஆண்ட்ரீ விஷின்ஸ்கி இன்றிரவு சுமார் 9-30 மணிக்கு திடீரென மாரடைப்பினால் காலமானார். அவருக்கு வயது 71 ஆகிறது.

ஐ. நா. நேரப்படி மாலை 4 மணிக்கு சற்று பின்னால், இந்த சோக நிகழ்ச்சி நடைபெற்றிருக்கிறது.

ஐ. நா. பொதுச் சபையில் அவரது மரணச் செய்தியை அறிவித்து, தலைவர் வான் கிளிபன்ஸ் சபைக் கூட்டத்தை உடன் ஒத்திவைத்தார்.

ஐ. நா. சபையில் உள்ள ரஷியப் பிரதிநிதிக் குழுவின் அலுவலகத்தில் அவருக்கு மரணம் சம்பவித்திருக்கிறது.

## நவீனமான மின்சார நிலையம்

### பம்பாயில் அமைக்க உலக பாங்கி ரூ. $7\frac{3}{4}$ கோடி கடன் உதவி

பம்பாயில் தெர்மல் மின்சார நிலையம் ஒன்று அமைப்பதற்காக உலக பாங்கி 162 லட்சம் டாலர் (சுமார் ரூ.7கோடி70லட்சம்) கடன் உதவியளித்தது.

இந்தியாவிலேயே மிக நவீனமான முறையில் அமையப் பெறும் இந்த மின்சார உற்பத்தி நிலையத்தால் பம்பாய் பகுதியில் மின்சார வசதி அதிகமாகும் எனத் தெரிகிறது.

## தஞ்சையில் வேலையில்லா நீதிமன்றங்கள்!

### பட்டுக்கோட்டை வழக்குகளை மன்னார்குடிக்கு மாற்றுமாறு கோரிக்கை

மன்னார்குடியில் உள்ள முன்சீப் கோர்ட்டில் வழக்குகள் ஏதும் கிடையாது என்று தெரிகிறது.

அதேபோல், திருவையாறு முன்சீப் கோர்ட்டிலும், கும்பகோணத்தில் உள்ள சபார்டினேட் நீதிமன்றத்திலும் போதுமான வழக்குகள் இல்லையாம்.

போதுமான வழக்குகள் இல்லாத காரணத்தால் இவைகள் வேலையற்று இருப்பதைப் போக்க தஞ்சை மாவட்ட நீதிபதி முயற்சிக்கிறார் என்று தெரிகிறது.

நீதிமன்றங்களில் போதுமான வழக்குகள் இல்லாத செய்தியை பட்டுக்கோட்டை வழக்கறிஞர்கள் சங்கத்தில் பேசுகையில் அவர் தெரிவித்து, பட்டுக்கோட்டையில் நடைபெறும் சில வழக்குகளை மன்னார்குடிக்கு மாற்ற வேண்டும் என்று கேட்டுக்கொண்டாராம்.

'மக்களின் சொந்த ஒத்துழைப்பைக் கொண்டே கிராம வாழ்க்கையைச் சீரமைப்பது,' என்பதுதான் சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின் முக்கிய நோக்கமாகும்.

## திரு - தமிழர் போராட்ட வழக்கு

### 328 பேர் சர்க்கார் சாட்சிகள்

திரு—தமிழகக் கிளர்ச்சியையொட்டி திரு—கொச்சி அரசாங்கம் தொடர்ந்துள்ள வழக்கில் 328 பேர் சர்க்கார் தரப்பு சாட்சிகளாக விசாரிக்கப்பட வேண்டுமென அவர்கள் பெயர்களை போலீசார் தாக்கல் செய்துள்ளனர் எனத் தெரிகிறது.

## சித்தூர் தமிழ்ப் பகுதி

### ஆந்திர தேர்தல் பிரச்னையாகிறது

ஆந்திர மாநிலத்தில் நடைபெறவிருக்கும் அடுத்த சட்டசபைத் தேர்தலில், சித்தூர் தமிழ்ப் பகுதிகளை தாய்த் தமிழகத்துடன் இணைப்பதை பிரச்னையாகக் கொண்டு போட்டியிடுவதென்று இங்கு கூடிய, தமிழ் நாடு வடக்கெல்லைப் பாதுகாப்புக் குழுக் கூட்டத்தில் முடிவாகியிருக்கிறதாம்.

## பி.-சோ. கட்சித் தலைவர் உண்ணாவிரதம்

### கோரிக்கைக்கு பட்டம் இணக்கம்?

ஆலூரில் உள்ள தேக்குமரத் தொழிற்சாலையில் இந்த மாதம் 12-ந் தேதியன்று தொழிலாளர்கள் மீது திரு-கொச்சி போலீசார் தடியடிப் பிரயோகம் செய்தது பற்றி உடனே விசாரணை செய்ய வேண்டுமென்று சி. ஜி. ஜனார்த்தனன் என்பவர், சாகும்வரை உண்ணாவிரதம் ஆரம்பித்திருக்கிறார்.

இவர், கொச்சி பிரஜா-சோஷலிஸ்டு கட்சியின் தலைவர்களில் ஒருவராவார். ராஜ்ய பார்லிமெண்டரி போர்டில் அவர் ஒரு உறுப்பினர் ஆவார்.

தடியடிப் பிரயோகம் பற்றி விசாரணை செய்ய வேண்டுமென்றும், இம்சம்பவத்திற்குக் காரணமான போலீஸ் அதிகாரிகளைத் தண்டிக்க வேண்டுமென்றும் ஜனார்த்தனன் கோருகிறார்.

கொச்சி பிரஜா-சோஷலிஸ்டு கட்சியினரின் முயற்சியால் பட்டம் தாணு பிள்ளை, இச்சம்பவம் பற்றி திருச்சூர் மாவட்ட நீதிபதியை விசாரணை செய்யுமாறு நியமித்திருக்கிறார் என்று செய்திகள் கிடைத்தன.

தோழர் ஜனார்த்தனன், இச்செய்தியை நம்ப மறுத்து, தனக்கு சர்க்காரிடமிருந்து நேரடியாக செய்திகள் இன்னும் கிடைக்கவில்லை என்று கூறியுள்ளார்.

## மார்ஷல் டிட்டோ - இந்தியா வருகை

யூகோஸ்லாவியா நாட்டுக் குடியரசுத் தலைவரான மார்ஷல் டிட்டோ டிசம்பர் மாதத்தில் இந்தியா வருவது மீண்டும் உறுதிப் படுத்தப்படுகிறது.

அவர் இந்தியாவில் இரண்டு வாரம் தங்கியிருப்பார் எனவும், அவருடன் பல மந்திரிகளும் ஆலோசகர்களும் வருகிறார்கள் என்றும் தெரிகிறது.

## நான்கு வல்லரசு மாநாடு

ரஷியா, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நான்கு வல்லரசுகளும், அடுத்த மே மாதத்தில் பாரிஸ் நகரில் மாநாடு ஒன்றில் கூடிப் பேசலாமென பிரெஞ்சுப் பிரதமர் மெண்டே பிரான்ஸ் ஐ. நா. பொதுச் சபையில் பேசுகையில் தெரிவித்தாராம்.

ஆனால் அந்த மாநாடு நடக்குமுன், மேற்கு ஜெர்மனியை ஆயுதபாணியாக்குவது பற்றிய பாரிஸ் ஒப்பந்தத்தை, சம்பந்தப்பட்ட நாடுகள் அங்கீகரிக்க வேண்டும் என்றும் அவர் தெரிவித்தாராம்.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை
சென்னை 23—11—1954 செவ்வாய்




"வேலை கிடைக்கவில்லை; திருடத் துவங்கிவிட்டனர்!

"வாழ்வின் வேதனை தீருவதற்கு மார்க்கம் இல்லை; ஆகவே, அவர்கள் பண்பு குறைந்துபோகிறது;

"படித்திருக்கிறார்கள் — பச்சிளம் பாலகர்களாக இருக்கிறார்கள்; ஆனால், திருடர்களாக, சமூகத்தில் இழிசெயல் புரிவோர்களாக மாறுகிறார்கள்; இதற்குக் காரணம், அவர்களுக்கு வேலை கிடைக்காததுதான்,"

என்று கல்கத்தா நகர போலீசார், கல்கத்தா நகரில் குற்றவாளிகள் அதிகமாவதுகுறித்து தங்கள் கருத்தைத் தெரிவிக்கும்போது கூறியுள்ளனர்.

சமூகத்தில் இழிசெயல் புரிவோரைத் தடுக்க ஏற்படுத்தப்பட்ட கல்கத்தா போலீஸ் இலாகாவினர், கடந்த ஜூலையிலிருந்து இதுவரை 10,500 பேரைக் கைது செய்திருக்கிறார்கள் என்று செய்திகள் கூறுகின்றன. இவர்களையெல்லாம் காலிகள், குண்டர்கள், 'ரௌடிகள்' என்று கல்கத்தாவில் அழைக்கின்றனராம்!

உலகிலே சிறந்த நகரங்களில் ஒன்று எனப்படும் கல்கத்தா நகரில், நாள் ஒன்றுக்கு சராசரியாக 175 நபர்கள் போலீசாரால் கைது செய்யப்படுகின்றனர் என்று செய்திகள் கூறுகின்றன.

பார்க்கும்போது மகிழ்ச்சியூட்டும் மாளிகைகளும், எங்கு பார்த்தாலும் தொழிற்சாலைகள் நிறைந்தும் காணப்படும் கல்கத்தா நகரில், நாள்தோறும், சிறு குற்றங்களுக்காக 175 பேர் கைது செய்யப்படுகின்றனர்.

இப்படிக் கைது செய்யப்படுவோர் அனைவரும் 'பரம்பரைத் திருடர்கள்' அல்லர்; பிறர் சொத்தைக் கொள்ளையடித்து மட்டுமே வாழ வேண்டிய நிலையில் இருப்பவர்களும் அல்லர்; இவர்களில் பெரும்பாலோர் இளைஞர்கள்; படித்தவர்கள்; பண்புடன் வளர்க்கப்பட்டவர்கள்!

"அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை; வறுமை அவர்களைப் பிடித்தாட்டுகிறது; வேலை கிடைக்காத காரணத்தால், 'என்ன செய்வது, நேரத்தை எப்படிச் செலவிடுவது,' என்று தெரியாமல், கலங்கி நிற்கும் இளைஞர்களை 'வருவீர்' என்று அழைக்க, நூல் நிலையங்களோ, விளையாட்டுக்கூடங்களோ இல்லை; அதன் காரணமாக அந்த இளைஞர்கள் இழிசெயல்களைப் புரிகின்றனர்," என்று போலீசார் கூறுகின்றனர். கல்கத்தாவில் ஏற்பட்டுள்ள இந்த நிலைமை, மேற்கு வங்க சர்க்காருக்கு அச்சமூட்டியிருக்கிறதாம்!

கல்கத்தா நகரில், இன்று மிகப் பெரிய பிரச்சினையாகத் தோன்றியுள்ள இந்நிலைமை, அங்கு தோன்றாமலேயே தடுத்திருக்க முடியும்—ஆளும் சர்க்கார் பயன் தரும் திட்டங்களைத் தீட்டியிருந்தால்!

திட்டம் தீட்டுகிறார்கள்—அது பெயர் அளவில்தான் பயன் தருகிறது.

"நாடு வளர வேண்டும்; வருங்கால மக்கள் இன்புற்றிருக்க வேண்டும்," என்று ஆட்சியிலிருப்போர் கருதுகின்றனர் என்றால், 'கல்கத்தாவில் இளைஞர்கள், திருடர்களாய் மாறும் நிலை ஏன் ஏற்பட்டது,' என்பதை ஆராய வேண்டும்.

இது, கல்கத்தாவை மட்டுமே பாதிக்கக்கூடிய பிரச்சினை அல்ல; பம்பாயில் தோன்றலாம்; சென்னையிலும் ஏற்படலாம்.

வேலையில்லாத் திண்டாட்டம், கல்கத்தாவில் விளைவிக்கும் கொடுமைகளைவிட, சென்னையில் அதிகக் கொடுமைகளை விளைவிக்கிறது; 'இல்லை,' என்று கூற முடியாது.

'இல்லை' என்ற பிரச்சினையும், வறுமை என்னும் அச்சமும், வேலையில்லாத் திண்டாட்டத்தின் விளைவுகளாகும். அதன் முடிவுதான், இளைஞர்கள், இழிசெயல் புரியும் பரிதாப நிலைக்குச் செல்லும் மார்க்கமாகிறது.

"என்ன செய்யலாம்; எப்படி இவர்களுக்கு வேலை தரலாம்," என்று மேற்கு வங்க சர்க்கார் ஆலோசனை செய்கிறதாம்.

சென்னை போன்ற நகரங்களில் இது போன்ற கொடுமைகள் ஏற்படாவண்ணம் ஆட்சியில் உள்ள சர்க்கார் ஆவன செய்ய வேண்டும்.

'பள்ளிக்கூடங்களை அதிகமாகக் கட்ட வேண்டும்,' என்ற எண்ணம் ஏற்படுவதைப்போலவே, 'பள்ளியில் படித்து வெளியே வரும் இளைஞர்களுக்கு உடனே வேலை கிடைக்குமாறு செய்ய வேண்டும்,' என்ற நிலையும் பிறக்க வேண்டும்.

"வேலை கிடைக்காத காரணத்தால், இளைஞர்கள் பலர் தீய வழியில் செல்கிறார்கள்," என்று, கல்கத்தா போலீசார் எடுத்துச் சொல்லி, "ஆவன செய்யுங்கள்; நிலைமை எல்லையைத் தாண்டிவிட்டது," என்று, ஆட்சியாளரை எச்சரித்து இருக்கிறார்கள்.

"இளைஞர்களே, நாட்டுக்குச் சேவை செய்ய முன்வாருங்கள்; நவ இந்தியாவை நிர்மாணிக்கும் பணியில் ஈடுபடுங்கள்," என்று நாள்தோறும் ஆட்சியில் உள்ள காங்கிரஸ் அரசினர் அழைப்பு விடுக்கிறார்கள்; ஆனால், "இளைஞர்கள் பலர், வேலை கிடைக்காமல், வீதிகளிலே திரிந்து, வேதனையினால் மனப் பண்பை இழந்து, திருடர்களாகிறார்கள்," என்று கல்கத்தா போலீசார் காரணம் கூறுகிறார்கள்.

ஒருபக்கம், இளைஞர்களை சேவைக்கு அழைக்கிறார்கள்; மறுபக்கம், 10,500 பேரை சிறைக்கு அழைத்துச் செல்கிறார்கள். அவர்களில் பலர், 'இளைஞர்கள்,' என்றும் கூறுகிறார்கள்.

இந்த நிலை மாற வேண்டும். இளைஞர்களின் எதிர்காலம் பாழாகாமலிருக்கத் திட்டமிட வேண்டும். இது, ஆட்சிபீடத்தில் அமர்ந்திருக்கும் காங்கிரஸ் சர்க்கார், அவசரமாகச் செய்ய வேண்டியவைகளில் ஒன்றாகும்!

## அணுசக்தியால் விவசாயம் உருமாறும்

அணுசக்தியை ஆக்க வேலைகளில் செலுத்துவதினால் விவசாயத்தில் புரட்சிகரமான மாறுதல் ஏற்படும் என்று கூறப்படுகிறது.

என்றைக்கேனும் ஒரு நாள், அணுசக்தி, விவசாய இயந்திரங்களை இயக்குவதுமல்லாமல், பயிர்களையும், பிராணிகளையும் சிறந்த 'தர'முள்ளவைகளாக ஆக்குவதற்கும் அற்புதமாய் உதவக்கூடும்.

அதிகமாக விளைவிக்கவும், பயிர்கள் விரைவாக வளர்ந்து, ஒரே பருவத்தில் ஒரு முறைக்கு மேல் பயிரிடவும் அணுசக்தி ஆராய்ச்சி வழிகாட்டலாம்.

செயற்கை மழை பெய்விப்பது சர்வ சாதாரணமாகலாம்; பாலைவனங்கள் பச்சைப் பசேலென மாறலாம்.

உரங்களை உபயோகிப்பது பற்றி, இன்று தெரிவதைவிட, இன்னும் எவ்வளவோ தெரியவரும்; அணுசக்தி ஆராய்ச்சி அத்துறையில் ஏற்கனவே அதிகம் முன்னேறியுள்ளது.

"நம்முடைய திறமையெல்லாவற்றையும், அழிவுக்காக அன்றி, உண்மையிலேயே, இன்னும் அதிகச் செழிப்பான வாழ்வு மலருமாறு பயன்படுத்துவதற்கு உலக நிலைமை அமையுமானால், வருங்காலம் இன்னும் எவ்வளவோ வளமுள்ளதாக இருக்கும்," என்று கூறப்படுகிறது.

## ஆசியாவில் கம்யூனிச விஸ்தரிப்புத் திட்டம்

### சீனத் தலைவர்களிடையே கருத்து வேற்றுமையாம்!

ஆசியாவில் உள்ள கம்யூனிஸ்டு இயக்கங்களுக்குப் போதுமான பொருள் உதவியும், ஆள் பலமும் தந்து உதவும் திட்டமொன்றை உடனடியாகத் தீவிரமாக அமுல் நடத்த வேண்டுமென்று சீனக் கம்யூனிஸ்டுத் தலைவர்களில் முக்கியமானவரான லியூ-ஷோவ்-சி விரும்புகிறார் என்றும், ஆனால், சீனப் பிரதமர் இத்திட்டத்தை சாதாரணமாகவே அமுல் செய்ய வேண்டுமென்று கூறுகிறார் என்றும் சொல்லப்படுகிறது.

சீனாவின் உள்நாட்டு விவகாரங்களைப் பலப்படுத்தும் வகையில் மேற்சொல்லப்பட்ட 'அபிவிருத்தி'த் திட்டத்தை சாதாரணமாகவே அமுல் செய்ய வேண்டுமென்று சூ-என்-லாய் கருதுகிறார் என்றும் சொல்லப்படுகிறது.

கம்யூனிச விஸ்தரிப்புக்கான இத்திட்டத்தில் சூ-என்-லாய்க்கும், லியூ-ஷோவ்-சிக்கும் கருத்து வேற்றுமை காணப்படுகிறதாம்.

இச்செய்தியை 'ஹாங்காங் ஸ்டாண்டர்டு' என்னும் இதழ், கட்டுரை ஒன்றின்மூலம் தெரிவித்திருக்கிறது.

லியூ-ஷோவ்-சி, சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்திய குழுச் செயலாளர் ஆவார்.

கம்யூனிச விஸ்தரிப்புத் திட்டத்தை அமுல் செய்வது பற்றி இருவரிடையேயும் கருத்து வேற்றுமை ஏதும் கிடையாது என்றும், எப்போது அதைச் செய்வது என்பது பற்றித்தான் கருத்து வேற்றுமை காணப்படுகிறது என்றும் அக்கட்டுரை தெரிவிக்கிறது.

சீனாவில் சூ-என்-லாயும், லியூ-ஷோ-சியும், மாசே-துங்கின் கொள்கைக்கு இரு தூண்கள் என்று சொல்லப்படுகிறது.

சீனாவின் தளபதியாக இருக்கும் சூ-டே, ஒரு தலைவர் என்று அவரைச் சொல்வதைவிட மத்தியஸ்தம் செய்பவர் என்று கூறுகிறார்கள்.

## தொழிலாளர்களுக்கு வீட்டு வசதி

### மத்திய சர்க்கார் கண் துடைப்பு

தொழிலாளர்களுக்கு வீடு கட்டித் தரும் திட்டத்திற்காக இந்திய அரசாங்கம் அக்டோபர் மாதத்தில் ரூ. 6,50,145 அனுமதித்திருப்பதாகத் தெரிகிறது.

இத்திட்டத்தின் கீழ் 333 வீடுகள் கட்டப்படும்.

அனுமதிக்கப்பட்டுள்ள தொகை கடன், மானியம் ஆகியவைகளாகத் தரப்படுமாம்.

இந்தத் தொகையில் கோவையை அடுத்த சிங்காநல்லூர் வசந்தா மில் தொழிலாளருக்கு வீடுகட்டிக் கொள்வதற்காக ரூ. 19,704 மானியமாகவும், ரூ. 29,556 கடனாகவும் தரப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

இதைக் கொண்டு இரு அறைகள் கொண்ட 32 ஓர்டுக்கு வீடுகள் கட்டப்படும் எனத் தெரிகிறது.

அனுமதிக்கப்பட்டுள்ள மொத்தத் தொகையில், ரூ. 2,61,750 திரு-கொச்சிக்கு; ரூ. 68,850 பம்பாய்க்கு; ரூ. 37,785 சௌராஷ்டிரத்துக்கு; ரூ. 2,32,500 ஐதராபாத்திற்கு—என்று பிரித்துத் தரப்பட்டுள்ளதாம்.

## நீண்டகால சிறைத் தண்டனை பெற்ற கைதிகள்

### குடும்பத்துடன் வாழ காலனிகள் அமைக்கப்படும்

#### பம்பாய் அரசாங்கம் முடிவு

நீண்டகால சிறைத் தண்டனை பெற்றுள்ள கைதிகளுக்காக, இரண்டு இலவசக் காலனிகளை அமைக்க பம்பாய் அரசாங்கம் முடிவெடுத்துள்ளதாம்.

அவை, கர்நாடகத்தில் ஒன்றும், குஜராத்தியில் ஒன்றுமாக அமையுமாம்.

இந்தக் காலனிகளில் குடியேற்றப்படும் கைதிகள் தங்கள் குடும்பத்தாருடன் சேர்ந்து வாழ்வதுடன், வேலை செய்து பணம் சம்பாதிக்கவும் செய்வர் என்றும், மகாராஷ்டிரத்தில் ஏற்கனவே இம்மாதிரிச் சிறைக் காலனி ஒன்றுள்ளது எனவும் சொல்லப்படுகிறது.

## மூடபக்தி மக்களைக் 'குருடர்'களாக்குகிறது

### கண் நோய் சிகிச்சை பற்றிய மாநாட்டில் பேச்சு

இரண்டாவது தென்னிந்திய கண் சிகிச்சை மாநாடு மதுரை மருத்துவக் கல்லூரியில் நடைபெற்றபோது, வரவேற்புக் குழுத் தலைவர் டாக்டர் என். சூரியநாராயண ஐயர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"நம் நாட்டு மக்களில் பலர் கண் நோயால் பாதிக்கப்படுகின்றனர். கண் நோயால் பாதிக்கப்பட்டவர்களில் பெரும்பாலானோர், சிகிச்சை அளிக்கப்பட்டால் குணம் பெற்று, நிவாரணம் பெற முடியும். ஆனால் நாட்டிலே நிலவுகிற ஏழ்மை, அறியாமை, 'மூடபக்தி' இத்தனையும் நோயுற்றவர்களை சிகிச்சை பெறுவதினின்றும் தடுத்து விடுகின்றன. இவர்களிலே பலர் நோய் முற்றி, சிகிச்சை செய்வதால் பார்வையைத் திரும்பவும் பெற முடியாது போய்விடுகிற நிலை வளர்ந்த பிறகே மருத்துவ உதவி கோரிவருகின்றனர்," என்று குறிப்பிட்டார்.

மேலும் அவர் பேசுகையில் கூறியதாவது:—

"மாவட்ட தலைமை மருத்துவ மனைகளில் மட்டும், கண் நோய் சிகிச்சைக்கான ஏற்பாடுகள் இருப்பது போதுமானதல்ல; ஒவ்வொரு தாலுகாவிலும் கண் நோய் சிகிச்சைப் பிரிவுடன் கூடிய மருத்துவ மனையும், கிராம மக்களுக்குச் சேவை செய்யும் வகையில் கண் நோய் சிகிச்சைக்கான வசதிகளுடன் கூடிய மோட்டார் வண்டிகளும் இருக்கவேண்டும்," என்றார்.

மாநாட்டிற்கு டாக்டர் ஈ. வி. சீனிவாசன் தலைமை தாங்கினார். மாநாட்டில் தீர்மானங்கள் சிலவும் நிறைவேறின என்று தெரிகிறது.

## மார்க்கெட் தேடுகிறார்கள்!

கோவா, நவ. 20—

கோவாவில் விளையும் விவசாயப் பொருட்களுக்கு மார்க்கெட் தேடுவதற்காக, இரண்டு வியாபாரிகள், ஒரு உற்பத்தியாளர் கொண்ட கோவா வர்த்தகத் தூதுக் குழு ஒன்று, பாகிஸ்தான் இலங்கை ஆகிய நாடுகளுக்குச் செல்லும் எனத் தெரிகிறது. இந்த முயற்சி, கோவாமீது இந்திய சர்க்கார் விதித்துள்ள 'பொருளாதாரக் கட்டுப்பாட்டை' முறியடிக்கும் நோக்கம் கொண்டதாம்.

இத்தகவலை, போர்த்துகீசிய தேசிய செய்தி நிறுவனம் அறிவித்துள்ளது.

## அமெரிக்க நிபுணர்கள் வருகின்றனர்!

பத்திரிகைக் காகிதம் தயாரிப்பதற்கு, மத்திய பாரத் மாநிலத்தில் 'நேபா நகர்' என்னுமிடத்தில் அமைந்துள்ள நேபா மில்ஸ், நியூயார்க் 'எபாஸ்கோ சர்வீசஸ்' கம்பெனியால் கட்டப்பட்டது. இத்தகைய உற்பத்திசாலை இந்தியாவிலேயே இதுதான் முதலாவது ஆகும்.

இந்த நிறுவனத்தின் உற்பத்தி செழிக்கவும், அங்கு வேலை செய்பவர்களுக்கு தற்கால நிர்வாக முறைகளைப் பற்றி பயிற்சியளிக்கவும் அக்கம்பெனி, ஐந்து காகித உற்பத்தி நிபுணர்களை இந்தியாவுக்கு அனுப்பும்.

ஆண்டொன்றுக்கு 30,000 டன் பத்திரிகைக் காகிதம் இந்த பத்திசாலையிலிருந்து கிடைக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. இந்தியா தற்பொழுது உபயோகிக்கும் பத்திரிகைக் காகிதத்தில் இது மூன்றிலொரு பங்காகும்.

## ஆந்திராவில் தேர்தல்

### சில விபரங்கள்

ஆந்திர சட்ட சபைக்கு நடைபெறப்போகும் புதிய தேர்தலுக்கு உத்தேசமாக சுமார் ரூ. 35 லட்சம் செலவாகக் கூடுமென மதிப்பிடப்படுகிறது.

அண்மையில் நடைபெற்ற 3 உப தேர்தல்களில் ஆன செலவுகளைக் கொண்டு இத்தொகை கணக்கிடப்பட்டுள்ளது. அந்த உப தேர்தலில் ஒவ்வொரு தொகுதிக்கும் ரூ. 17,500 செலவாகியதாம்.

ஆந்திர தேர்தல் பற்றிய விஷயங்கள் குறித்து, தேர்தல் கமிஷனுடன் ஆலோசனை நடத்த ஆந்திரத் தேர்தல் அதிகாரி புதுடில்லி பயணமாகியுள்ளார் எனத் தெரிகிறது.

ஆந்திராவில் இப்போது 196 இடங்கள் சட்ட சபைக்கு உண்டு. மாவட்டவாரியாக — ஸ்ரீகாகுளம் 20; கிருஷ்ணா 17; நெல்லூர் 17; சித்தூர் 17; மேற்கு கோதாவரி 16; கர்னூல் 16; குண்டூர் 25; கீழ் கோதாவரி 23; அனந்தப்பூர் 14; கடப்பை 11—என்று அத்தொகுதிகள் பிரிக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு தொகுதிக்கும் சராசரி வாக்காளர் தொகை 1,04,632 ஆகும்.

மத்திய சமூக நல அபிவிருத்தி போர்டு, நடப்பு ஆண்டில் மொத்தம் 129 சமூக நல அபிவிருத்தி விஸ்தரிப்புத் திட்டங்களைத் துவக்கியுள்ளது. முதலாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இதற்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள லட்சிய அளவு 352 ஆகும்.



# கழகச் செய்திகள்

## ஈரோடு நகர தி. மு. கழகம்

### அண்ணாதுரை பார்வையிட்டார்

16—11—54 மாலை 6 மணிக்கு பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்களும், தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், அ. பொன்னம்பலனார், கே. ஏ. மதியழகன், சி. வி. இராசகோபால், கே. ஆர். இராமசாமி ஆகியோரும், ஈரோடு நகர தி. மு. கழகத்திற்குச் சென்று பார்வையிட்டு, கழகத் தோழர்களுக்குப் பாராட்டுதல் தெரிவித்து, அவர்கள் மேலும் ஊக்கமுடன் பணியாற்றுமாறு கேட்டுக்கொண்டனர்.

## காங்கயத்தில் தி. மு. கழக பொதுக் கூட்டம்

16—11—54 மாலை 7 மணிக்கு தோழர் பி. முத்து தலைமையில், தி. மு. கழகச் சார்பில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. பல்லாயிரக்கணக்கான மக்கள் திரண்டிருந்தனர். ஏராளமான பெண்களும் கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

தலைவரின் முன்னுரைக்குப் பிறகு, தோழர்கள் எஸ். முத்து, கோவை—செழியன், காஞ்சி சி. வி. இராசகோபால், ஈ. வெ. கி. சம்பத், அ. பொன்னம்பலனார், பொதுச் செயலாளர் அண்ணாதுரை ஆகியோர் தி. மு. கழகக் கொள்கைகளை விளக்கியும், சமூக, அரசியல், பொருளாதார விடுதலை குறித்தும், வடவர்தம் ஆதிக்கத்தையும், சுரண்டலையும் ஒழிக்கப்பட வேண்டியதின் அவசியம் பற்றியும், திராவிட நாடு திராவிடருக்காக வேண்டியதின் அவசியத்தை விளக்கியும், தி. மு. கழகத்தின் மும்முனைப் போராட்ட வெற்றிகள் குறித்தும் சொற்பொழிவாற்றினர்.

பொதுச் செயலாளர் அண்ணாதுரைக்கும், மற்ற தோழர்களுக்கும் காங்கயம் தி. மு. கழகச் சார்பிலும், மற்ற கிளைக் கழகங்கள் சார்பிலும் கைத்தறி துண்டுகள் அணிவிக்கப்பட்டு, மலர் மாலைகள் சூட்டப்பட்டன.

## அனுமந்தப்பட்டியில் தி. மு. க. பொதுக்கூட்டம்

11—11—54 மாலை 7 மணிக்கு, தோழர் வெ. இராமு தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர்கள் எஸ். முத்து, கே. எஸ். சந்தானம், கே. ஏ. கலையழகன் ஆகியோர் பேசினர்.

ஃ ஃ ஃ

### கழகக் கொடி களவாடப்பட்டது

11-11-54 அன்று இரவில், அனுமந்தம்பட்டி காந்தி திடலில் பறக்கவிடப்பட்டிருந்த தி. மு. கழகக் கொடியை யாரோ சில காலிகள் திருடிக்கொண்டு போய்விட்டிருக்கிறார்கள். இதுபற்றிப் போலீசில் புகார் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## திருச்சி—துறையூரில் தி. மு. கழகப் பொதுக்கூட்டம்

14—11—54 மாலை 6-30 மணிக்கு தோழர் அ. சித்தி தலைமையில், பிள்ளையார் கோவில் முன்னால் நடைபெற்ற கழகப் பொதுக்கூட்டத்தில், தோழர்கள் ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ., ஏ. பி. அன்பில் தர்மலிங்கம், மதிவாணன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## தூத்துக்குடியில் தி. மு. க. பொதுக் கூட்டம்

29—10—54 இரவு 7 மணிக்கு சந்தணமரியம்மன் கோயில் தெரு மைதானத்தில், தோழர் ஏ. அய்யாசாமி தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், தோழர்கள் எம். எஸ் இராமசாமி, அண்ணாமலை, கே. வி கே. சாமி, ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## நொய்யலில் (கரூர்வட்டம்) தி. மு. க. பொதுக்கூட்டம்

15—11—54 மாலை 6 மணிக்கு, பன்னீர்செல்வம் திடலில், தோழர் என். ரெத்தினம் எம்.எல்.ஏ., தலைமையில் நடைபெற்ற கழகப் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் கே. ஏ. முருகேசனார், டி. ஆர். முத்துசாமி, எம். கே. கரிகாலன், வை. இரத்தினவேலு, ஏ முத்துசாமி ஆகியோர் சொற்பொழிவாற்றினர். பின்னர், இங்குள்ள இரயில்வே நிலையத்துக்குக் கீழ்ப் பக்கமுள்ள இடங்களில் கடை வைத்து கடந்த 15 ஆண்டுகளாக ஜீவனம் நடத்துவோருக்குப் பாதகமாக, அங்குள்ள தாசில்தார், அந்தக் கடைகளை இடித்து காலிசெய்ய வேண்டுமென்று முயற்சிப்பதைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## நெல்லிக்குப்பத்தில் தி. மு. கழகப் பொதுக் கூட்டம்

8—11—54ல் தோழர் ச. இராசகோபால் தலைமையில் திரௌபதியம்மன் திடலில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், தோழர்கள் கே. ஆர். சபாபதி, கே. ஜி. சாமிநாதன், சி. பாலவேலாயுதம், சிற்றுளி சுப்பிரமணியம் ஆகியோர் கம்யூனிஸ்டுகளின் பொய்ப் பிரசாரத்தைக் கண்டித்துப் பேசினர்.

## தண்டலச்சேரியில் தி.மு.க. பிரசாரக் கூட்டம்

13—11—54 இரவு 7-30 மணி அளவில் கும்மிடி பூண்டிக்கு மூன்று மைல் தூரத்திலுள்ள தண்டலச்சேரி எனும் சிற்றூரில், அவ்வூரிலுள்ள பெரியவர் திரு. இராமாஞ்சுலு தலைமையில், கும்மிடிபூண்டி தி. மு. கழகச் சார்பில் நடைபெற்ற பிரசாரக் கூட்டத்தில், தோழர் கு. இராசமாணிக்கம், நம் நாட்டின் தற்கால நிலையைக் குறித்தும், தோழர் ஏ. சு. மணி மக்கள் வாழ வேண்டிய முறையைப் பற்றியும், தோழர் இசை அரசு ஆட்சியாளர்களின் தில்லு முல்லுகளையும், தோழர் புவி அரசு நாட்டில் நிலவும் மூட நம்பிக்கைகளைப் பற்றியும், ப. செ. தாயமணி திராவிட முன்னேற்றக் கழகக் கொள்கைகளைப் பற்றியும், ஆ. கிருஷ்ணன் திராவிட நாடு பிரிய வேண்டியதின் அவசியத்தைப் பற்றியும், மதம், கடவுள் தற்காக பொருளாதாரம் போன்ற பிரச்சினைகள் பற்றியும் பேசினர்.

## தர்மபுரி தி. மு. கழகம்

### சொற்பயிற்சிக் கூட்டம்

15—11—54 இரவு 10-மணிக்கு, தோழர். சு. தியாக அரசன் தலைமையில் நடைபெற்ற சொற்பயிற்சிக் கூட்டத்தில், 'ஏகாதிபத்தியம்' என்பது பற்றி தோழர் தேவனும், 'திராவிடத்தில் வடவர் ஆதிக்கம் ஏன்' என்பது குறித்து, தோழர் டி. சி. இராமனும், 'முதலில் சமுதாய சீர்திருத்தம் ஏன் தேவை' என்பது பற்றி தோழர் த. ஏ. சிங்காரமும், 'சமுதாயப் புரட்சி' என்பது பற்றி தோழர் ஏ. இராமன், செல்வநாயகனும், 'திராவிட நாடு பிரிவினை ஏன்?' என்பதுபற்றி கலையழகனும், 'மாணவர்கள் தி. மு. கழகத்தில் கலந்து கொள்வது ஏன்?' என்பதுபற்றி தோழர் சு. பாண்டியனும் பேசினார்கள்.

## முல்லைவாடி தி. மு. கழகம்

13—11—54 மாலை 5 மணிக்கு தோழர் ப. அ. ஆறுமுகம் தலைமையில் நடைபெற்ற செயற்குழு கூட்டத்தில், 6—11—54ல் நடைபெற்ற கழகத் துவக்க விழாவின் வரவு-செலவு கணக்கு சரிபார்க்கப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டு, பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## பம்பாய் — மாதுங்கா தி. மு. க. முதலாண்டு விழா

12—11—54 இரவு 7½ மணிக்கு சப்பூ கார்டனில் தோழர் பொன். திரு. சபாபதி தலைமையில் நடைபெற்றக் கழக முதலாண்டு விழாப் பொதுக்கூட்டத்தில், தோழர் தொ. து. அன்புச் செழியன் வரவேற்புரையாற்றியதும், தோழர் அ. வள்ளிநாயகம் கழகக் கொடி ஏற்றுவித்து, கொடி காட்டும் கழகக் குறிக்கோள்களைக் குறிப்பிட்டுப் பேசினார். பின்னர் கூட்டத் தலைவர் கழகத்தின் வளர்ச்சி பற்றியும், மாதுங்கா கிளைக் கழகத்தின் பங்கு பற்றியும் பேசியபின், இறுதியாக, அருப்புக்கோட்டை தோழர் எம். எஸ். இராமசாமி அவர்கள் 'திராவிட நாடு ஏன் பிரிய வேண்டும்?' என்பது பற்றி அரசியல், சமூக, பொருளாதார நிலைகளை எடுத்துக் காட்டி சொற்பொழிவாற்றினார்.

## ஆனைமலை பகுதிகளில் தி.மு.க. கிளைகள் துவக்கம்

கருமலை தி. மு. கழகச் செயலாளர் தோழர் இரா. பிச்சமுத்து தலைமையில், ஆனைமலை பகுதிகளில் தி. மு. கழகக் கிளைகள் அமைக்கப்பட்டு அங்கங்கே செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### அப்பர்பாரளை தி. மு. க. கிளை

செயலாளர்: சி. கணபதி; துணைச்செயலாளர்: ராமன்; பொருளாளர்: சு. செல்லையா; செயற்குழு உறுப்பினர்கள்: சொ. சங்கிலி, சு. பெருமாள், ராமன், வெ. லட்சுமணன், தி. சண்முகநாதன், ரா. மாசானம், சு. ரீமையா.

### பச்சமலை தி. மு. க. கிளை

செயலாளர்: ஆர். பொன்னுசாமி; துணைச் செயலாளர்: வி. எஸ். ராசு; பொருளாளர்: ம. வேல்சாமி; செயற்குழு உறுப்பினர்கள்: ம. சின்னசாமி, முருகையா, பழனிவேல், ச. சின்னையா, ராஜமாணிக்கம், ஆரோன்.

### மாணிக்கா தி. மு. க. கிளை

செயலாளர்: வி. கே. தங்கமுத்து; துணைச் செயலாளர்: த. துரைராசு; பொருளாளர்: சாலமோன்; செயற்குழு உறுப்பினர்கள்: ஆ.வேல், அன்பையன், பி. ராமசாமி, எஸ். சாமியப்பன், ஐ. நல்லமுத்து, சு. சாமுவேல், தசேமி, ராமசாமி.

## முத்துசேர்வாமடம் தி. மு. கழகம்

12—11—54 இரவு, இவ்வூரைச் சேர்ந்த தோழர் வி. கோபாலகிருஷ்ணன் என்பவர், கழகக் கொடியை அறுத்து விட்டார். அதுபற்றி போலீசில் புகார் செய்ய கழகச் செயலாளர் புறப்படும்போது, ஊர்ப் பொது மக்கள் அவரை நிறுத்தி வைத்து, கோபாலகிருஷ்ணனை இதுபற்றி விசாரிக்கையில், அவர் தமது குற்றத்தை ஒப்புக்கொண்டார். ஊர் மக்களின் வேண்டுகோளின்படி, அவர் தமது குற்றத்தை ஒப்புக்கொண்டு கழகத்தவரிடம் மன்னிப்புக் கோரிக்கொண்டமையால் அவர்மீது நடவடிக்கை ஏதும் எடுக்காமல் அவரை மன்னித்து, மீண்டும் கழகக் கொடி ஏற்றுவிக்கப்பட்டது.

## கொடுங்கையூர் (சென்னை) தி. மு. கழகம்

7—11—54 மாலை 3 மணிக்கு தோழர் கே. கே. நாதன் தலைமையில் நடைபெற்ற கழக உறுப்பினர் கூட்டத்தில், தோழர்கள் சி. சேரன், ஏகாம்பரம் ஆகியோர் செயற்குழு உறுப்பினர்களாகவும், தோழர் சி. சேரன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டபின், கழக ஆண்டு விழாவைக் கொண்டாட வேண்டுமென்றும், திராவிடர் திருநாளைக் கொண்டாடுவதெனவும் முடிவு செய்யப்பட்டது.

## சென்னை இராயப்பேட்டை தி. மு. கழகம்

7—11—54 மாலை 3 மணிக்கு, கழகப் பணிமனையில் தோழர் இளவரசு தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், தேசியகவிநாயகம், நுங்கம்பாக்கம் கழகத் தோழர் பழமணி ஆகியோர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தபின், ஆண்டு விழா கூட்ட வரவு-செலவு கணக்கும், வரவு-செலவு கணக்கும் பரிசிலனை செய்து ஒப்புக் கொள்ளப்பட்டது. தோழர் எஸ். சுந்தரம் அவர்கள் விலகல் கடிதம் ஏற்றுக்கொள்ளப்பட்டு, தோழர் ஏ. எல். கே. சாமி செயற்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## பம்பாய்—கொலாபா தி. மு. கழகம்

10—11—54ல், கூபரேஜ் திடலில், தோழர் எஸ். கே. ராசு தலைமையில் நடைபெற்ற கழக உறுப்பினர் கூட்டத்தில், சொற்பயிற்சி வகுப்பு நடத்துவதெனத் தீர்மானிக்கப்பட்டு, அதற்கு செயலாளராகத் தோழர் எஸ். பி. பெருமாள் தேர்ந்தெடுக்கப்பட்டார். மற்றும் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## இராமனுதபுரம்—புதூர் தி. மு. கழகம்

17—11—54ல், இவ்வூர் கிளைக் கழகத்தின் செயற்குழுக் கூட்டம் முன்னாள் கழகச் செயலாளர் தலைமையில் நடைபெற்றபோது, புதிய நிர்வாகக் குழுவினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: என். பெரியசாமி; துணைச் செயலாளர்: ரா. வெங்கடாசலம்; மாவட்டப் பிரதிநிதி: ஆர். எம். பழனிமுத்து.

## தனியாமங்கலம் (கீழையூர்வட்டம்) தி.மு.க.

11—11—54ல், மதுரை மாவட்டத்தில் விவசாயிகள் போராட்டத்தின்போது கலந்துகொண்ட இவ்வூர் தோழர்கள், தோழர் வே. அழகிரி தலைமையில் கூடி தி. மு. கழகத்தை அமைத்து, கழக நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தனர்:— செயலாளர்: அ. முத்துராமன்; துணைச் செயலாளர்: பெ. சிதம்பரம்; பொருளாளர்: வே. அழகிரி; மாவட்டப் பிரதிநிதி: சு. சோமசுந்தரம்; விளம்பர உறுப்பினர்: ப. கிருஷ்ணன்; செயற்குழுவினர்: வெ. தனிக்கோடி, சு. பெரி. பெரியண்ணன், சி. பாண்டி, வி. பனையன், பூ. அம்மாவாசி, வி. சேது, சி. சோலைமலை.

## திருவாதவூர் தி. மு. கழகம்

12—11—54 இரவு 9 மணிக்கு தோழர் சு. தோ ஆறுமுகம் தலைமையில் நடைபெற்ற கழகப் பொதுக் குழு கூட்டத்தில் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: க. மங்கையன்; துணைச் செயலாளர்: பா. பாண்டியன்; பொருளாளர்: பா. பாண்டியன்; விளம்பர உறுப்பினர்கள்: சு.தொ. ஆறுமுகம், லக்குமணன்; செயற்குழு உறுப்பினர்கள்: மீ. மாணிக்கம், க. பாரி, கு. பொன்னையன், பொ. பேயபிள்ளை, ஆ. பொன்னையன், ந. பொ. முத்தையன், வீ. வெ. ஆசைத்தம்பி, பா. மங்கைக்கருப்பன், க. வேலாயுதம், வே. மாணிக்கம். பின்னர் வரவு-செலவு கணக்குகள் சரிபார்த்து ஒப்படைக்கப்பட்டது. திருவாதவூர் பஞ்சாயத்துக் குழு தேர்தலில் தி. மு கழக உறுதி மொழிச் சீட்டில் கையொப்பமிடும் சுயேச்சை நபரை ஆதரிப்பதென்றும், 2-வது 3-வது வார்டுகளுக்கு தோழர்கள் க. பாரி, பெ. மு. ராமனதன், பா. மங்கைக் கருப்பன் ஆகிய 3 பேரை நிறுத்தி அவர்களுக்கு ஆதரவு திரட்ட வேலை செய்ய வேண்டுமென்றும், திரு-கொச்சி சர்க்கார் அடக்கு முறையைக் கண்டித்து, பாரபட்சமற்ற விசாரணை நடத்தும்படி கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## வில்லோனி எஸ்டேட் (வால்பாரை) தி.மு.க. கிளை

16—11—54ல் நடைபெற்ற உறுப்பினர்கள் கூட்டத்தில் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: பி. ஏ. வேல்சாமி; துணைச் செயலாளர்: வி. இராமசாமி; பொருளாளர்: பி. எஸ். தங்கசாமி; செயற்குழு உறுப்பினர்கள்: வி. சீனிவாசன், எம். அந்தோணி, எஸ். கோவிந்தன், கே. ஆர். கந்தையா, பி. எஸ். வையாபுரி, கே. இராமசாமி, எஸ். கருப்பசாமி, பி. ஏ. கோபால், கே. ஆர். காதன், எம். ஆர். முத்தையா, வி. கே. கந்தசாமி, வி. எஸ். ஆறுமுகம், கே. கந்தையா, வி. சுப்பையா, கே. மூர்த்தி, வி. டி. தாமஸ், பி. எஸ். ஜோசப், கே. ஆர். சுப்பிரமணியன், கே. இருளப்பன், எம். மாடசாமி, எம். முத்தையா, கே. ஆனகுட்டி.

## கரியணம்பட்டி தி. மு. க.

14—11—54 இரவு 10 மணிக்கு தோழர் ஏ. பி. முத்துவெள்ளை தலைமையில் நடைபெற்ற கழக உறுப்பினர்கள் கூட்டத்தில் கழக நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: எஸ். கே. சந்தானம்; துணைச் செயலாளர்: டி. வி. சுப்புசாமி; பொருளாளர்: வீ. ராமதாசு; மாவட்டப்பிரதிநிதி: வி. வெள்ளையப்பன்; செயற்குழு உறுப்பினர்கள்: எஸ். கே. சந்தானம், வீ. ராமதாசு, வீ. சுப்புசாமி, வி. வெள்ளையப்பன், எஸ். பாண்டியன், தி. கோவிந்தராசு, பி. சீனிவாசன், ஆர். திருமலைசாமி, வீ. பெருமாள், முருகேசன், சா. திருட்டிணசாமி.

## குன்றத்தூர் தி. மு. கழகம்

18—11—54 இரவு 8½ மணிக்கு கழகக் கட்டிடத்தில் நடைபெற்ற செயற்குழு கூட்டத்தில் விரைவில் இவ்வூரில் கழகச் சார்பாக ஒரு பொதுக் கூட்டம் நடத்துவதெனவும், தோழர்கள் டி. கே. இரத்தினம், பி. கணேசன் ஆகிய இருவரும் செயற்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டும், வருகிற பொங்கல் விழாவை விமரிசையாக நடத்துவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

## நெகமம் தி. மு. கழகம்

14—11—54ல், கழகக் கட்டிடத்தில் தோழர் ரங்கசாமி தலைமையில் நடைபெற்ற கழக உறுப்பினர் கூட்டத்தில் கழக நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: பி. எஸ். மதிவாணன்; துணைச் செயலாளர்: மூ. இளந்தமிழன்; பொருளாளர்: சே. அப்பாவு; விளம்பர உறுப்பினர்: ஏ. நடராஜ்.

## திருப்பாலக்குடி தி. மு. க.

15—11—54ல், தோழர் அ. உத்திராபதி தலைமையில் நடைபெற்ற கழக செயற்குழு உறுப்பினர் கூட்டத்தில், தோழர் க. உத்திராபதி செயற்குழுவிலிருந்து விலக்கப்பட்டு, அவருக்குப்பதிலாக தோழர் பி. ராமு தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர் கழகப் பொதுக் கூட்டத்தை டிசம்பர் திங்களில் நடத்துவதென முடிவு செய்யப்பட்டது.

## கீழப்பாலூர் தி. மு. கழகம்

இவ்வூர் தி. மு. கழகத்திற்கு கீழ்க்கண்ட தோழர்கள் புதிய நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: அரு. இராமநாதன்; துணைச் செயலாளர்: இரா. தங்கவேல்; பொருளாளர்கள்: பி. ஆர். வைகுண்டம், தே. ரெங்கநாதன்; விளம்பர உறுப்பினர்: எஸ். பி. சாமி; மாவட்டப் பிரதிநிதிகள்: வி. சிவபெருமான், அரு. இராமநாதன்; செயற் குழு உறுப்பினர்கள்: பி. ஆர். சிவன், எஸ். இலக்குமணன், எஸ். ஜெயக்கண்ணு, வி. முத்துஅரசு, பி. எம். சந்தனமுத்து, எஸ். சண்முகநாதன், எம். எஸ். இலக்குமணன். திராவிடர் திருநாளன்று ஓர் நாடகம் நடத்துவதென முடிவு செய்யப்பட்டது.

# பழம் தரும் வரை மரத்தை அழிக்கமாட்டோம்!

இலங்கை இந்தியர் பற்றி கொத்தலாவலே கூற்று

"இலங்கையில் காணப்படும் தோட்டத் தொழில் உயர்வைப் பாதுகாக்கும் முறையிலும், அதிக உற்பத்தி, உயர்ந்த விலை இவைகளைப் பாதுகாத்துக் கொள்ளவும் சிறந்த உழைப்பாளிகளான இந்தியர்களின் தொழில் உதவி தேவை; ஆகவே, இன்னும் சிறிது காலத்திற்கு இந்தியத் தொழிலாளர்கள், இலங்கையில் வேலையில் அமர்த்தப்பட்டிருப்பார்கள் என்பது சொல்லாமலே விளங்கும்."

என்று இலங்கைப் பிரதமர் கொத்தலாவலே, லண்டனில் உள்ள இலங்கை கழகத்தில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

இக்கழகம், இலங்கையில் உள்ள தோட்டத் தொழிலின் பாதுகாப்புக்காக அமைக்கப்பட்டு, 1888-ல் இருந்து வளர்ந்து வருகிறது.

தொடர்ந்து கொத்தலாவலே பேசுகையில், இலங்கையரை வேலைக்கமர்த்தும் திட்டம் பற்றிப் பேசினர்.

55 வயதான இந்தியத் தோட்டத் தொழிலாளர்கள் நாடு திரும்புமாறு செய்யப்படுவார்கள் என்றும், அவர்களுக்குப் பதில் இலங்கை மக்கள் அந்த வேலைகளில் அமர்த்தப்படுவார்கள் என்றும் அவர் கூறினர்.

## 'சீட்டோ' ஒப்பந்தம்

பாகிஸ்தான் இன்னும் கையெழுத்திடவில்லை

மணிலாவில் அண்மையில் உருவான 'சீட்டோ' உடன்படிக்கையில், இன்னமும் பாகிஸ்தான் கையொப்பமிடவில்லை எனத் தெரிகிறது.

மேலும், பாங்காங் நகரில், வருகிற ஜனவரி மாதத்தில், 'சீட்டோ' ஒப்பந்தம் உருவாகும்போது கலந்துகொண்ட நாடுகளிடையே துவங்கும் மாநாட்டில் கலந்துகொள்ள வருமாறு பாகிஸ்தானுக்கு இன்னமும் அழைப்புக் கிடைக்கவில்லையென்றும் தெரிகிறது.

## கோவை பஞ்சாலைத் தொழிலாளருக்கு 'போனஸ்'

2 முதல் நான்கு மாத சம்பளம் வரை தரப்படும்

**35,000 தொழிலாளர் பெறுவர்**

கோவை மாவட்டத்தில் உள்ள 35,000 பஞ்சாலைத் தொழிலாளருக்கு இரண்டு முதல் நான்கு மாத சம்பளம் வரை 'போனசாகத்' தர தீர்ப்பாகியுள்ளது.

வரும் டிசம்பர் 31-ந் தேதிக்குள் 'போனஸ்' தரப்பட்டுவிடும்.

இந்தப் பிரச்சினைக்குப் பரிகாரம் காண சர்க்கார் நியமித்த பஞ்சாயத்துக் குழு, நிர்வாகிகள்-தொழிலாளர்கள் ஆகிய இருசாராரையும் கலந்தாலோசித்து மேற்கண்ட தீர்ப்பை வழங்கியுள்ளனர்.

இந்த போனஸ் கடந்த 1952-53-ம் ஆண்டுகளுக்காகத் தரப்படுவதாகும்.

39 ஆலைகளில் பணியாற்றும் 35 ஆயிரம் தொழிலாளருக்குக் கிடைக்கக்கூடிய போனஸ் தொகை ரூ. 35 லட்சம் என, மதிப்பிடப்படுகிறது.

ஆறு ஆலைகளில் தொழிலாளர்களுக்கு 4·16 சதவிகிதம் 'கிராசுவிடி' இனும் தரப்படுமென்றும் தெரிகிறது.

பயிற்சி பெறுவோர் தவிர இதர எல்லா தொழிலாளருக்கும் 'போனஸ்' கிடைக்கும். ஏற்கனவே இது முன்பணமாகத் தரப்பட்டிருந்தால் கொடுத்தது போக மிகுதி தரப்படும். அதிகம் தரப்பட்டிருந்தால் வசூலிக்கப்படும் எனத் தெரிகிறது.

## சட்டக் கல்லூரிக்கு மாணவர் விடுதி

சென்னை சட்டக் கல்லூரிக்கு மாணவர் விடுதியொன்று 1956—57-ல் நிச்சயம் கட்டப்படும் என்று நிதி மந்திரி கனம் சுப்ரமணியம் சட்டக் கல்லூரியில் கலாச்சார வார விழாவினைத் துவக்கி வைத்துப் பேசுகையில் குறிப்பிட்டார்



## கர்னாடக தி.மு.க. முதல் மாநாடு

டிசம்பர் 18, 19 தேதிகளில் பெங்களூரில் நடைபெறும்

★

சமுதாய சீர்திருத்த மாநாடு
தலைவர்:
காஞ்சி-கல்யாணசுந்தரம்
திறப்பாளர்:
ப. உ. சண்முகம்

★

அரசியல் மாநாடு
தலைவர்:
என். வி. நடராசன்
திறப்பாளர்:
தோழியர் அருண்மொழி

பொதுச்செயலாளர் அண்ணாதுரை உட்பட கழக முன்னணி வீரர்கள் அனைவரும் கலந்துகொள்வார்கள்.

### சொற் பயிற்சிக் கூட்டம்

24-11-54 மாலை 6 மணிக்கு, சென்னை 5-வது வட்ட தி. மு. கழகத்தில், தோழர் ஆ. வேணு நினைவில் 'மூட நம்பிக்கையும்-அறிவியலும்' என்ற பொருள் பற்றி சொற் பயிற்சிக் கூட்டம் நடைபெறும். தோழர்கள் ஆர். வேணுகோபால், இளஞ்செழியன், நலங்கிள்ளி, வளவன் இ. இராசேந்திரன் ஆகியோர் பேசுவர்.

### பொதுச்செயலாளர் அண்ணாதுரை தக்கோலம் வருகை

★

வ. ஆ. தக்கோலம் தி. மு. கழகச் சார்பில் 28—11—54 மாலை 6-மணிக்கு நடைபெறும் பொதுக்கூட்டத்தில் பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்கள் சொற்பொழிவாற்றுவார்.

## தோழர் ஆசைத்தம்பி

இலங்கையில் தனது சுற்றுப் பயணத்தை முடித்துக்கொண்டு தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி 22—11—54 அன்று விருதுநகருக்குப் புறப்பட்டார். (ந-நி.)

## ரிசர்வ் பாங்கி கவர்னர்

என். ஆர். பிள்ளை நியமனம்

இந்திய ரிசர்வ் பாங்கியின் கவர்னராக திரு. என். ஆர் பிள்ளை நியமிக்கப்படுவார் எனத் தெரிகிறது.

இப்போதுள்ள கவர்னர் பி. ராமராவின் பதவிக் காலம் வருகிற 1955-ம் வருடம் ஜூன் மாதம் 30-ந் தேதியுடன் முடிவடைகிறதாம்.

அந்த இடத்தில்தான் இப்போது வெளி விவகார இலாக்கா காரியதரிசியாக பணியாற்றுபவரும் ஐ சி எஸ். அதிகாரியுமான திரு. என் ஆர். பிள்ளையை நியமிப்பது என்று முடிவாகியுள்ளதாம்.

இவ்வருட இறுதியில் பதவியிலிருந்து ஓய்வு பெறவிருக்கும் உதவி கவர்னரான சுந்தரேசனின் பதவியில், மத்திய அரசாங்க நிதி மந்திரி அலுவலகத்தைச் சேர்ந்த பொருளாதார விவகார இலாகாவில் காரியதரிசியாகப் பணியாற்றி வரும் கே. ஜி அம்பேகாங்கர் என்ற ஒரு ஐ. சி. எஸ். அதிகாரி நியமிக்கப்படுவார் எனவும் தெரிகிறது.

## திரு. நேசமணி கைது செய்யப்படுவார்?

திரு—தமிழக 'விடுதலை தின' வழக்கில், கோட்டாறு முதல் வகுப்பு நீதிபதி முன் தொடரப்பட்டுள்ள வழக்கில், திரு. நேசமணி, எம். பி. ஒருவர் மட்டுமே எதிரி என்றும், அவரைக் கைது செய்யஉத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளதென்றும் தெரிகிறது.

இந்திய இரயில்வேக்களுக்கு, இவ்வாண்டில், 5 தினங்களுக்கு 6 இரயில் எஞ்சின்கள் வீதம் வினியோகிக்கப்படும்.

## மகனை மீட்க 73,000 ரூபாய்!

**கொள்ளைக் கூட்டத்தவர் கடத்திச் சென்றிருந்தனராம்**

மூல்சந்த் மகாஜன் என்ற பணக்கார வாலிபனை கொள்ளைக்காரர்கள் சிலர் கடத்திச் சென்று நான்கு மாதங்கள் 'சிறை'ப்படுத்தி வைத்துக் கொண்டு, மகாஜன் தந்தையிடமிருந்து ரூ. 73,000 ஈடாகப் பெற்றுக்கொண்டு விடுவித்துள்ளனர் என்ற செய்தி வெளியாகியுள்ளது.

மூல்சந்த் மகாஜன் தந்தை ஒரு பெரிய இலட்சாதிபதியாம்!

கொள்ளைத் தலைவனின் பெயர் மெக்லா என்பதாம்!

கடந்த ஜூலையில் ஒரு நாள் மகாஜன், ஜோத்பூரிலிருந்து 85 மைல் தொலைவில் உள்ள ஊரிலிருக்கும் தமது பூங்காவில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தாராம். அவரைக் காணவில்லை என்ற செய்தி ஒரு நாள் வெளியாயிற்று.

இப்போது திரும்பி வந்துள்ள மகாஜன், தான் காணமற்போன கதை பற்றிக் கூறுவதாவது:—

"தன்னிடம் அன்றொரு நாள் ஒருவன் போலீஸ் உடையில் வந்து, உள்ளூர் போலீஸ் 'சப்-இன்ஸ்பெக்டர்' விசாரணை ஒன்றிற்காக என்னை அழைப்பதாகக் கூறினான்.

சந்தேகம் எதும் கொள்ளாது நான் அவனைப் பின் தொடர்ந்தேன்; ஒரு பர்லாங் தூரம் சென்றதும், வேறு இரண்டு போலீஸ் உடையிலிருந்தவர்கள் இவ்வளவு மெதுவாக நடந்துவருவது குறித்துக் கண்டித்தனர்.

சிறிது தூரம் சென்றேன்; அந்த மூவரும் போலீஸ் ஸ்டேஷனுக்குச் செல்லவில்லை என்பதை உணர்ந்தேன். அவர்கள் என்னை கிராமத்தின் எல்லையிலிருக்கும் ஓரிடத்திற்கு அழைத்துச் சென்றனர். அங்கு நான்கு ஒட்டகங்கள் பிரயாணத்திற்குத் தயாராயிருந்தன. நான் அவர்களை எதிர்த்து எதும் செய்ய முற்படுமுன்பே, துப்பாக்கி முனையில் என்னைப் பயமுறுத்தி, ஒட்டகத்தின் மேல் ஏற்றினர்; என்னைக் கடத்திச் சென்றனர். ஏழு நாட்கள் ஒட்டகத்தின் மேலேறிக்கொண்டு இரவும் பகலுமாகப் பிரயாணம் செய்தோம். இறுதியாக ஒரு தனியான வெள்ளைக் கட்டிடத்திற்கு அழைத்துச் சென்றனர்; அதுதான் அந்தக் கொள்ளையர் மறைந்து கொள்ளும் கூடாரம் என்பதைப் பின்னர் உணர்ந்தேன்.

என்னைக் குளிப்பாட்டி, சாப்பாடு தந்த பின்னர், என் தந்தைக்குக் கடிதம் ஒன்றெழுதுமாறும், அக்கடிதத்தில், என்னை விடுவிக்கக் கொள்ளைக்காரர்களுக்கு என் தந்தை ரூ. 73,000 தரவேண்டுமெனவும் கூறினார்கள்

பின்னர், என் தந்தை, கடிதப்படி பணம் கொடுத்து என்னை மீட்டுள்ளார்.

மூல்சந்த் மகாஜன் தந்தை, எப்படி, யாரிடம் பணம் கொடுத்து மகனை மீட்டார் என்ற விபரங்களையெல்லாம் கூற மறுக்கிறாராம். கொள்ளையரிடம், தாம் அந்த விபரங்களைக் கூறுவதில்லை என வாக்களித்துள்ளாராம்.

விஷயங்களைக் கூறி, கொள்ளையரின் விரோதத்தை விலை கொடுத்து வாங்க அவர் விரும்பவில்லையாம்.

இப்போது விடுவிக்கப்பட்ட தன் மகனுடன் அந்த லட்சாதிபதி நிம்மதியாக வாழும் பொருட்டு கிராமம் ஒன்றுக்குச் சென்றுள்ளாராம்!

## குற்றத்தை மறுக்கிறர்!

எகிப்திய நாட்டில் கர்னல் அப்டெல் நாசரின் தலைமையிலிருக்கும் சர்க்காரைக் கவிழ்க்க சதி செய்ததாகக் குற்றம் சுமத்தப்பட்டுள்ள முஸ்லிம் சகோதரத்துவ நிறுவனத்தின் தலைவரான ஹாசன் ஹாடிபி, தம்மீது சுமத்தப்பட்டுள்ள குற்றத்தை நீதிமன்றத்தில் மறுத்தார் எனத் தெரிகிறது.

## தெரிந்து கொள்ளுங்கள்

1953-54-ம் ஆண்டில் பொதுத் தொழில்துறை அபிவிருத்தித் திட்டங்களில் நாளொன்றுக்கு 24,000 ரூபாய் முதலீடு செய்யப்பட்டுள்ளது.

தாமோதர் நதிப் பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்டத்தில் அடங்கியுள்ள வேலைத் திட்டங்களில் திலையா ஜல-மின்சார உற்பத்தி நிலையமும், கோனார் அணைக்கட்டும் இதுவரை பூர்த்தியாகியுள்ளன.

கிண்டியிலுள்ள 'கிங் இன்ஸ்டிட்யூட்'டில் ஏற்படுத்தப்பட்டுள்ள பி. சி. ஜி. தடை மருந்து ஆராய்ச்சிக் கூடத்தில், வாரத்துக்கு 60 லட்சம் தடவைக்கான மருந்துகள் தயாரிக்கப்பட்டுவருகிறன.

இந்தியா சுதந்திரமடைந்த பிறகு, பாசன அபிவிருத்தித் திட்டங்களுக்காகச் செலவிடப்பட்டுள்ள தொகை, கடந்த 100 ஆண்டுகளில் செலவிடப்பட்டுள்ள தொகையைவிட அதிகமாகும்.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரிசாவிலுள்ள ரூர்கேலாவில் 30 கோடி ரூபாய் செலவில் புதிய இரும்பு-எஃகுத் தொழிற்சாலை நிறுவப்படும்.

கரையோர வர்த்தகம் முழுவதையும் இந்தியக் கப்பல்களுக்கு ஒதுக்குவதென்ற இந்திய சர்க்காரின் கப்பல் போக்குவரத்துக் கொள்கையின் நோக்கம் 1952—53-ம் ஆண்டிலேயே பூர்த்தியாகிவிட்டது.

விவசாயிகளுக்கு நியாயமான வட்டி விகிதத்தில் கடன் வசதி அளிப்பதற்காக, மாநில சர்க்கார்களும், மத்திய உணவு உற்பத்திப் பெருக்க இயக்கமும் ஆண்டொன்றுக்குச் சுமார் 20 கோடி ரூபாய் வீதம் செலவழிக்கின்றன.

இப்பொழுது முடிவடையும் நிலையிலுள்ள மயூராட்சி அணை அபிவிருத்தித் திட்டம், மேற்கு வங்காளத்திலுள்ள நிலங்களுக்கு நீர்ப்பாசன உதவியளித்து வரும்.

இந்தியாவில், 1953—54-ல், உணவுத் தானிய சாகுபடி விஸ்தீரணம் மொத்தம் 26.1 கோடி ஏகராவுக்கு அதிகமாகும். இந்த உச்ச அளவை இந்தியா இதற்கு முன் எட்டியதில்லை.

1954 ஆகஸ்ட் மாதத்தில் இந்திய ரயில்வேக்களுக்கு, இந்தியாவிலும், வெளிநாடுகளிலுமுள்ள உற்பத்தியாளர்களிடமிருந்து உச்ச அளவு வாகன்கள்—2,127 வாகன்கள் சப்ளை ஆயின.

1954—55-ம் நிதி ஆண்டின் முதல் மூன்று மாதங்களின் சுங்கம், மத்திய வரி, நகர சபை வரி, வருமான வரி, ஆஸ்தி வரி ஆகிய இனங்களின் மூலம், சுமார் 79.1 கோடி ரூபாய் வசூலாகியிருக்கிறது.

சிந்திரி ரசாயன உரத்தொழிற்சாலையில், 1953-ம் ஆண்டு முழுதியில், மொத்தம் சுமார் 4,45,663 டன் அம்மோனியம் சல்பேட் உரம் உற்பத்தி ஆகியது.

சிறு தொழில்கள், நடுத்தரத் தொழில்கள் ஆகியவற்றை விரிவாக்குவதற்கு நிதி உதவி புரிவதற்கான நிதிக் கார்ப்பரேஷன் நிறுவனங்கள் பஞ்சாப், பம்பாய், ஐதராபாத் ஆகிய இடங்களில் நிறுவப்பட்டிருக்கின்றன.

ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் மூன்று ஆண்டு காலத்தில் 4,50,000 கிலோ வாட்டுகள் மின்சார உற்பத்தி சக்தி அதிகரித்திருக்கிறது.

ரோம் பல்கலைக் கழகம், இந்திய உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கு கௌரவ தத்துவப் பட்டமொன்றை வழங்கியுள்ளது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என் அண்ணாதுரை, எம். ஏ.

